| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 118 | 1 பிரஹ்ம விலக்கண நிருபகம் | 4 | வத்தையை அடையும் போது, | தையைப் பொருந்துங் காலத்தில், |
| | | | தேஜோமயர் என்னும் பெயர் போய், | பிரகாச சொரூபர் என்கின்ற நாமமானது நீங்கி, |
| | | | பரிபூரணர் என்னும் பெயர் வந்தது. | வியாபக சொரூபர் என்னும் நாமம் உண்டாயிற்று. |
| 119 120 | 2. அத்தியாரோப நிருபகம் | 5 | இந்த அகண்ட, | இப்போது பிரஹ்ம இலக்கண நிருபகத்தில் கூறிய ஒன்றினுலும் கண்டிக்கப்படாத, |
| | | | பரிபூரண, | வியாபகமாக முற்றிலும் நிறைந்துள்ள, |
| 126 | | | சச்சிதானந்தப் பிரஹ்மத்தில், | அஸ்தி பாதிப் பிரிய (சத்து சித்து ஆனந்த) இலக்கணங்களையுடைய பிரஹ்மத்தின் இடமாக, |
| 129 | | | சுத்தியில் இரசதம்போல, | இப்பியில் வெள்ளி போல] (கிளிஞ்சிலில் கற்பிதசொரூபமுடைய வெள்ளி போல), |
| | | | மூலப் பிரகிருதி என்னும் ஒரு சத்தி உண்டு. | (கற்பித சொரூபமுடைய) காரணப் பிரகிருதியென்றுசொல்லப்பட்ட ஓர் சத்தி உளது. |
| 139 | | | அந்தச் சத்தி, | பிரஹ்மத்தில் அநாதி கற்பிதமாயுள்ள பிரகிருதி என்னும் அச்சத்தியானது, |
| | | | விகிருத, | வெவ்வேறு தன்மையனவாகிய, |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 139 | 2 அத்தியாரோப நிரூபகம் | 5 | சத்துவ இராசத தாமதமாகிய, | சாத்விக, இராஜத, தாமதம் என்னும் பெயர்களை யுடைய, |
| | | | முக்குண சொரூப மாக விரிந்து தோன்றும். | திரிகுண வடிவமாக, விகாசமாகித் தோன்றும். |
| | | 6 | அம் முக்குணங் களில் சத்துவ குணம் மாயை என்றும், | முன் சொல்லப்பட்ட திரி குணங்களில் நின்மலமாகிய சாத்வீக குணமானது, வாஸ்தவ சொரூபம் இல்லாத தாகிய, மாயைஎனவும், |
| 144 | | | சர்வஞ்ஞ உபாதி என்றும், | எல்லாம் அறிதலாகிய சட்குணங்கள்தோன்று வதற்கு ஏதுவாயது எனவும், |
| 146 | | | ஈசுவர காரண சரீரம் என்றும் சொல்லப்படும். | ஈசுவரனுடைய மூல சரீரம் என்றும் கூறப் படும். |
| 147 | | | அம்மாயையில் நின்மல சலப் பிரதிவிம்பம் போல, | அத்தன்மையாகிய மாயையினிடத்து, தெளிந்தசலத்திலுள்ள சூரியாதிப்பிரதிவிம்பம் போல, |
| | | | பிரஹ்மப் பிரதி விம்பம் சுலக்ஷண மாக உளது. | பிரஹ்மத்தின் பிரதி விம்பமானது சுய லக்ஷ ணமாக விளங்குவ தாய் இருக்கிறது. |
| 148 | | | அந்தப்பிரதிவிம்ப சைதன்னியம், | பிரதிவிம்ப ரூபமாக விளங்குகின்ற, அச் சைதன்னியமானது, |
| | | | சர்வஞ்ஞனாகிய ஈசுவரன் என்று சொல்லப்படும். | எல்லாம் அறிந்தவனா கிய ஈசுவரன் என்னும் பெயரால் கூறப்படும். |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 150 | 2. அத்தி யாரோப நிருபகம் | 7 | அச் சத்துவ குண மாயை, | அந்தச் சத்துவகுண மான மாயையானது, |
| | | | சத்துவத்தில் சத்துவம், | சாத்வீகத்தில் சாத்வீகம், |
| | | | சத்துவத்தில் இராசதம், | சாத்வீகத்தில் இராசதம், |
| | | | சத்துவத்தில் தாமதம், | சாத்வீகத்தில் தாமதம், |
| | | | என்னும்முக்குண சொரூபமாய் இருக்கும். | என்று கூறப்படும் மூன்றுகுண வடிவமாய் இருக்கும். |
| 150 151 | | | அவற்றுள் சத்து வத்தில் சத்துவம் பிரதானம் ஆகும் போது, | அம் முக் குணங்களி னுள், தெளிந்த சலத் தில் தெளிந்த சலம் மேலிடுவது போல, சத்துவகுணத்தில்இரா சதமும்தாமதமும்அடங் கிச் சத்துவகுணம் அதி கரிக்கும்போது, |
| | | | அதில் பிரதிவிம்ப மாயுள்ளஈசுவரன், | அச்சத்துவ குணத்தில் பிரதிபலன ரூபமாக விளங்குகின்ற ஈசுவரன், |
| 151 | | | சகத்தை இரட்சிக் கின்றமையால் விஷ்ணு என்றும், | சராசரப் பிரபஞ்சங்கள் அனைத்தையும் நிலை பெறும்படி இரக்ஷிக் கின்றமையால், வியா பக சொருபனாகிய விஷ்ணு எனவும், |
| | | | சத்துவத்தில் இராசதம் பிர தானமாகும் போது, | தெளிந்த சலத்தில் கலங்கல் சலம் மேலிடு வதுபோல, சத்துவ குணத்தில், சத்துவ |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 151 | 2 அத்தியாரோப நிருபகம் | 7 | | குணமும், தாமத குணமும் அடங்கி இராசத குணம் அதிகரிக்கும் காலத்தில், |
| | | | அதில் பிரதிவிம்பமாய் உள்ள ஈசுவரன், | அவ்விராசதகுணத்தில் பிரதிபலன ரூபமாக இருக்கின்ற ஈசுவரன், |
| | | | சகத்தைச் சிருஷ்டிக்கின்றமையால் பிரஹ்மா என்றும், | பிரபஞ்சத்தை உற்பத்தி செய்கின்றமையால் மகத்தாகிய பிரஹ்மா எனவும், |
| 152 | | | சத்துவத்தில் தாமதம் பிரதானம் ஆகும் போது, | தெளிந்த சலத்தில் வண்டல் சலம் மேலிடுவது போல, சத்துவத்தில் சத்துவமும், இராசதமும் அடங்கித் தாமதகுணம் அதிகரிக்கும் போது, |
| | | | அதில் பிரதிவிம்பமாய் உள்ள ஈசுவரன், | அத்தாமத குணத்தில் பிரதிவிம்ப ரூபமாக இருக்கின்ற ஈசுவரன், |
| | | | சகத்தை உபசம்மாரம் செய்கின்றமையால், | சகல பிரபஞ்சங்களையும் முற்றிலும் சங்கரித்தலால், |
| 153 | | | உருத்திரன் என்றும், சொல்லப்படுவன். | சங்கார கர்த்தாவாகிய உருத்திரன் என்றும் சொல்லப்படுவன். |
| 158 | | | இங்ஙனம் சத்துவ குண கற்பனை கூறப்பட்டது. | இந்தப்பிரகாரம் சத்துவகுண மாயையால் கற்பிக்கப்பட்ட விஷ்ணுவாதிய நாமங்களும், அவர்களின் செயல்களும்; ஆகிய கற்பனை கூறப்பட்டது. |

(பக்க எண் 3ஆம் பதிப்பு வியாக்கியான நூல்படி)

| நூல் பக்க எண் | நிரூபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 158 159 | 2 அத்தியா ரோப நிரூபகம் | 8 | இராசத குணம் அநேக ரூபமாய்ப் பிரிந்து, | இரசோகுணப் பிரகிருதியானது அநேக அம்சங்களாகப் பிரிவுற்று, |
| | | | அவித்தைகள் என்றும், சீவ காரண சரீரங்கள் என்றும், சொல்லப்படுவனவாய், | அஞ்ஞானங்கள் எனவும், சீவர்கட்கு மூல சரீரங்கள் எனவும் நாமங்கள் கூறப்படுவனவாய், |
| | | | ஒன்றற்கு ஒன்று தாரதம்மியம் உள்ளவைகளாய் இருக்கும். | ஓர் அம்சத்துக்கு, மற்றோர் அம்சம், வித்தியாசம் உள்ளவைகளாக இருக்கும். |
| 162 | | | இவ்வவித்தைகளிடத்திலும், | இந்த இராசத குணமாகிய அவித்தைகளிடத்திலும், |
| | | | மலினசலப் பிரதிவிம்பம் போல, | கலங்கல் சலத்தில் உள்ள சூரியப்பிரதிவிம்பம் போல, |
| | | | பிரஹ்மப் பிரதிவிம்பங்கள் உளவாம். | பிரஹ்மத்தின் பிரதிவிம்பங்கள் உள்ளன. |
| | | | இப் பிரதிவிம்ப சைதந்நியங்கள் கிஞ்சிஞ்ஞர் என்றும், | இந்தப் பிரதிபலனங்களாகிய சேதனங்கள் அற்ப அறிவினர்கள் எனவும், |
| 165 | | | சிதாபாச சீவர் என்றும், | சித்தின் போலிகளாகிய சீவர்கள் எனவும், |
| 167 | | | * பிராஞ்ஞன் என்றும்சொல்லப்படும். | பிரஞ்ஞா ரூபர்கள்எனவும், நாமங்கள் உடையனவாகக் கூறப்படுவனவாம். |

* பிராஞ்ஞன் – என்பதன் விரிவுப்பொருள், வியாக்கியான (விரிவுரை) நூல். 3 ஆவது உதிதி நிரூபகம் 72-73 ஆம் வினு விடைகளில் காண்க.

(பக்க எண் 3ஆம் பதிப்பு வியாக்கியான நூல்படி)

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 168 | 2 அத்தியாரோப நிருபகம் | 9 | இவ்வவித்தைகளும், | இந்த அவித்தைகளும், |
| | | | இராசதத்தில் சாத்துவீகம், | இரஜசில் சத்துவம், |
| | | | இராசதத்தில் இராசதம், | இரஜசில் இரஜசு, |
| | | | இராசதத்தில் தாமதம், | இரஜசில் தமசு, |
| | | | என்னும் முக்குண சொரூபங்களாக உள்ளன. | எனப்படும் மூன்றுகுண உருவங்களாக உள்ளன. |
| | | | இவற்றுள் இராசதத்தில் சாத்வீகம் பிரதானம் ஆகும் போது, | இம் முக் குணங்களுள் கலங்கள் சலத்தில் தெளிந்தசலம் மேலிடுவதுபோல, இராசத குணத்தில் இராசத குணமும் தாமத குணமும் அடங்கி, சாத்வீக குணம் அதிகரிக்கும் காலத்தில், |
| 168 169 | | | அதில் பிரதிவிம்பமாய் உள்ள சிதாபாசன், | அச்சாத்வீக குணத்தில் போலி உருவமாக இருக்கின்ற சீவனானவன், |
| | | | தத்துவ ஞாந நிஷ்டன் ஆவன். | எதார்த்தசொருபத்தை (உண்மையானதத்துவமாகிய ஆத்மப் பிரம்ம சொருபத்தை) அறியும் ஞானசாதகன் ஆவன். |
| 170 | | | இராசதத்தில் இராசதம் பிரதானம்ஆகும்போது, | கலங்கள் சலத்தில் கலங்கல் சலம் மேலிடுவதுபோல, இராசத குணத்தில் சத்துவ |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 170 | 2 அத்தியாரோப நிருபகம் | 9 | | குணமும் தாமத குணமும் அடங்கி இராசத குணம் அதிகரிக்குங் காலத்தில், |
| | | | அதில் பிரதிவிம்பமாய் உள்ள சிதாபாசன், | அவ்விராசதகுணத்தில் போலியுருவமாகஇருக்கின்ற சீவனுனவன், |
| | | | காமக்குரோத பரனுய்க் கன்மநிஷ்டன் ஆவன். | காமக்குரோதாதிகுண சிரேஷ்டனுய்க் கருமசாதகன் ஆவன். |
| 175 | | | இராசதத்தில்தாமதம் பிரதானம் ஆகும்போது, | கலங்கல் சலத்தில் வண்டல் சலம் மேலிடுவது போல, இராசதத்தில் சத்துவ குணமும் இராசத குணமும் அடங்கி, தாமத குணம் அதிகரிக்குங் காலத்தில், |
| | | | அதில் பிரதிவிம்பமாய் உள்ள சிதாபாசன், | அவ்வாறு அதிகரித்த தாமத குணத்தில் பிரதிபிம்பமாக விளங்குகின்ற சீவனுனவன், |
| | | | சோம்பல், நித்திரை, மயக்கங்கள் உடையவன் ஆவன். | ஆலசிய, உறக்கப், பிரமோகங்களைப் பொருந்தினவன் ஆவன். |
| 176 | | | இங்ஙனம் இராசதகுண கற்பனை சொல்லப்பட்டது. | இந்தப் பிரகாரம் இராசத குணமாகிய அவித்தையால் கற்பிக்கப் பட்ட பொய்ம்மைகள் கூறப்பட்டன. |
| 178 | | 10 | தாமத குணமானது, | தமோகுணப் பிரகிருதியானது, |

(பக்க எண் 3ஆம் பதிப்பு வியாக்கியான நூல்படி)

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 178 | 2 அத்தியாரோப நிருபகம் | 10 | ஆவரணம், விக்ஷேபம் என இரண்டு சத்திகளாகத் தோன்றும். | மறைப்புருப சத்தி, தோற்றருப சத்தி என்னும் உபய (இரண்டு) சத்திகளாகத் தோன்றும். |
| 179 | | | இவ்விரண்டில் ஆவரண சத்தியானது, | இவ்வுபய சத்திகளில், அசத்தாவரணம், அபானுவரணம் என்னும் மறைப்புச்சத்தியானது, |
| | | | தத்துவஞானியும், | உண்மைஞானம் (உண்மையாகிய ஆத்மப் பிரஹ்ம ஐக்கிய ஞானம்) உடையவர்களும், |
| 197 | | | ஈசுவரனும் தவிர, | மாயாப்பிரதிவிம்பராகிய ஈசுவரனும் நீங்கலாக, |
| | | | மற்றைச் சீவர்கட்கெல்லாம், | ஏனைய சீவர்கள் அனைவருக்கும், |
| | | | சரீரத் திரயம், | தூல சூக்கும காரணம் ஆகிய மூன்று சரீரம், |
| 198 | | | சிதாபாசன், | சித் பிரதி விம்பனாகிய சீவன், |
| | | | சாக்ஷிசைதன்னியம், | சாக்ஷி மாத்திரமாய் உள்ள கூடத்த சேதனம், |
| | | | என்னும் இவைகளுள், | என்று சொல்லப்பட்ட இத் தத்துவங்களுள், |
| | | | ஒன்றற்கு ஒன்று உள்ள, | ஓர்தத்துவத்திற்கும், மற்றோர் தத்துவத்திற்கும் இருக்கின்ற, |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 198 | 2 அத்தியா ரோப நிருபகம் | 10 | பேதம், | சட, ஆபாச, சித்து இலக்கணம் ஆகிய வித்தியாசங்களை, |
| | | | தெரிய வொட்டா மல், | வேறுபிரித்து அறிவ தற்குக் கூடாத வண்ணம், |
| | | | மறைக்கும். | மறைத்துத் தோன்ரு திருக்கச் செய்யும். |
| 200 | | | இதனுல், | இவ்வாவரண சத்தி யால், |
| | | | மறைப்பை யுடைய சீவர்கள், | மறைவு செய்யப்பட்டி ருக்கின்ற சீவர்கள், |
| | | | (29) தத்துவங் களையும்' | தூலம் முதல் சைதன் னியம் ஈருகிய (29) தத்துவங்களையும் (தூலசரீரதத்துவங்கள் 6, சூக்கும சரீரதத்து வங்கள் 20, காரண சரீரதத்துவம் 1, சிதா பாசதத்துவம் 1, சாக்ஷிசைதன்னிய தத் துவம் 1, ஆகிய (29) தத்துவங்களையும்), |
| | | | ஒருமைப்பாட்டாக, | ஒரே தன்மையனவாக, |
| | | | நான் என்று அபி மானிப்பர். | அகம் என்று அபி மானிப்பர். |
| 201 | | | இந்த அபி மானமே, | இப்படிப்பட்ட அபி மானமே, |
| | | | அகங்காரக் கிரந்தி என்றும், | அகங்கார முடிச்சு என்றும், |
| | | | சம்சார பந்தம் என்றும், | சம்சாரக் கட்டு என்றும், |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 201 | 2 அத்தியா ரோப நிருபகம். | 10 | சொல்லப்படும். | சாத்திரங்களில் கூறப் படும். |
| 203 | | | சற்குரு கடாக்ஷத் தால், | உத்தம குருவின் கிருபா வீக்ஷணியத் தால், |
| | | | இவ்வாவரணம் நீங்கி, | இம்மறைப்புச் சத்தி நிவர்த்தியாகி, |
| 206 | | | (29) தத்துவங் களின், | சரீரத்திரய, சிதாபாச, சைதன்னியங்கள் ஆகிய (29) தத்துவங் களின், |
| 207 | | | ஒன்றற்கு ஒன்று உள்ள, | ஓர்தத்துவத்துக்கும், மற்ருேர்தத்துவத்துக் கும் இருக்கின்ற, |
| | | | பேதம் தெரி கிறதே, | வித்தியாசங்களை (வேற்றுமைகளை)ப் பிரித்து அறிதலே, (அறிதலின் பலமே), |
| | | | முத்தி. | மோக்ஷம் ஆம். |
| 209 | | | இப்படி ஆவரண சத்தியின் காரியம் சொல்லப்பட்டது. | இவ்வாறு மறைப்புருப சத்தியின் காரியம் கூறப்பட்டது. |
| 210 | | 11 | இனி, விக்ஷேப சத்தியினின்றும், | மேலும், தோற்ற ரூப மாகிய சத்தியிலிருந் தும், |
| | | | சத்ததன்மாத் திரையான ஆகா யம்தோன்றிற்று. | சத்தமே தனக்குச் சுபாவ குணமாய் உள்ள ஆகாய பூதம் தோன்றிற்று. |
| 212 | | | அதில் நின்றும் | அவ்வாகாயபூத உப கித சேதனத்தினின் றும், |

| நூல் பக்க எண் | நிரூபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 212 | 2 அத்தியாரோப நிரூபகம் | 11 | பரிச தன்மாத்திரையான வாயுவும், | பரிசகுண மாத்திரமாய் உள்ள வாயு பூதமும், |
| | | | அதில் நின்றும், | அவ்வாயுவின் உபகித சேதனத்தினின்றும், |
| | | | ரூபதன் மாத்திரையானஅக்கினியும், | ரூபகுணமாத்திரமாய் உள்ள அக்கினி பூதமும், |
| | | | அதில் நின்றும், | அவ்வக்கினியின் உபகித சேதனத்தினின்றும், |
| | | | ரசதன்மாத்திரையான அப்புவும், | ரசகுணமாத்திரமாய் உள்ள அப்பு பூதமும், |
| | | | அதில் நின்றும், | அவ்வப்புவின் உபகித சேதனத்தினின்றும், |
| | | | கந்ததன் மாத்திரையான பிருதிவியும், | கந்த குணமாத்திரமாய் உள்ள பிருதிவி பூதமும், |
| | | | தோன்றின. | விவர்த்தமாகத் தோன்றின. (அதிஷ்டானத்தினும் விஷம அதாவது வேறு ஆகிய சத்தையுடைய வேற்று ரூபம் விவர்த்தம் எனப்படும்). |
| 213 | | | இவ்வைந்து பூதங்கட்கும் காரணமான விக்ஷேப சத்தியில், | இந்தப் பஞ்ச பூதங்கட்கும் மூலமான தோற்ற ரூப சத்தியில், |
| | | | தமசில் சத்துவம், தமசில் இராஜசம், | தமோகுணத்தில் சத்துவகுணம், தமோ குணத்தில் இரசோ |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள். |
|---|---|---|---|---|
| 213 | 2 அத்தியா ரோப நிருபகம் | 11 | தமசில் தமசு, என்னும் இவை கள், | குணம், தமோகுணத் தில் தமோகுணம், என்னும் இவைகள், |
| | | | அற்பம் கருவாக, இருந்தமையால், | குறைவுற்றுக் காரண மாக இருந்தன வாத லால், |
| | | | அதன் காரிய மாகிய ஐந்து பூதங்களும், | அவ்விக்ஷேபசத்தியின் காரியமாகிய பஞ்ச பூதங்களும், |
| | | | முக் குணங்களு டனேதோன்றின. | சத்துவம், ரஜசு, தமசு என்னும் மூன்று குணங் களுடனே தோன்றின. |
| 214 | | | இப்பூதங்கட்கு, | இவ்வாகாயம் ஆதிய ஐந்து பூதங்கட்கும், |
| | | | தன்மாத்திரைகள் என்றும், | தன்தன் சுபாவ மாத் திரமாக உள்ளவை கள் எனவும், |
| | | | அபஞ்சீகிருத பூதங்கள் என்றும், | கலத்தல் இன்றிய பூதங்கள் எனவும், |
| | | | முக்குண பூதங் கள் என்றும், | திரிகுண பூதங்கள் எனவும், |
| | | | சூட்சும பூதங்கள் என்றும், | நுண்ணிய பூதங்கள் எனவும், |
| | | | பெயர் சொல்லப் படும். | சாத்திரங்களில் நாமம் வழங்கப்படும். |
| 215 | | 12 | சூட்சும பூதங் களில் நின்றும், | நுண்ணிய பூதங்களில் நின்றும், |
| | | | சூட்சும சரீரங் களும், தூலபூதங் களும்தோன்றின. | நுண்ணியசரீரங்களும், பருமைப் [illegible] பூதங்களும் உண்டாயின. |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள். |
|---|---|---|---|---|
| 215 | 2 அத்தியா ரோப நிருபகம் | 12 | எங்ஙனம் எனின், | எவ்வாறு உண்டாயின என்றால், |
| | | | ஆகாயம் ஆதிய ஐந்து பூதங்களின் சாத்வீக அம்சத்தில், | ஆகாயம் முதலிய பஞ்ச பூதங்களின் சத்துவ அம்சத்தில், |
| | | | பூதத்துக்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்து, | ஒவ்வொரு பூதத்துக்கு ஒவ்வொரு அம்சம் எடுத்து, |
| | | | ஒன்றாகக் கூட்டி வைக்கப் பட்டது அந்தக் கரணம் என்று சொல்லப் படும். | ஒன்றாகச் சேர்த்து வைக்கப்பட்டது உட்கருவி என்று கூறப் படும்.(அந்தர்=உள் — கரணம் = கருவி). |
| 216 | | | இவ்வந்தக் கரணத்தில், | இந்த (உட்கருவியாகிய)அகக்கரணத்தில், |
| | | | ஆகாசத்தின் அம்சம், | ஆகாய பூதத்தின் சத்துவ அம்சம், |
| | | | கூடியதற்கு அடையாளம், | சேர்ந்திருப்பதற்கு அறிகுறியாவது, |
| | | | அந்தக் கரணமும், | சத்துவாம்ச சமட்டியாகிய அகக்கரணமும், |
| | | | ஆகாயத்தைப் போல, | ஆகாயம் மற்றைப் பூதங்கட்கு இடம் கொடுத்தல் போல, |
| | | | சகலமான கேள்விகளுக்கும், | கேட்கத்தக்க கல்விகள் அனைத்தும் தங்கி நிற்றற்கு, |
| | | | இடம் கொடுத்துத்தரிக்கின்றது. | அவகாசம் கொடுத்துக் கொண்டிருக்கின்றது. |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள். |
|---|---|---|---|---|
| 218 | 2 அத்தியாரோப நிருபகம் | 12 | இப்படித் தரிக்கின்ற, | இங்ஙனம் அவகாசம் தந்து கொண்டிருக்கின்ற, |
| | | | விருத்திக்கு, | அந்தக் கரண பரிணும மாகிய விருத்திக்கு, |
| | | | உள்ளம் என்று பெயர். | உள்ளம் என்று நாமமாம். |
| 219 | | | வாயுவின் அம்சம், | வாயு பூதத்தின் சத்துவ அம்சம், |
| | | | கூடியதற்கு அடையாளம், | சேர்ந்திருப்பதற்குஅறி குறியாவது, |
| | | | அந்தக்கரணமும், | சத்துவாம்ச சமஷ்டியாகிய அகக்கரணமும், |
| | | | வாயுவைப்போல, | வாயு சதா சலிப்பது போல, |
| | | | அலைகின்றது. | சங்கற்ப விகற்பாத்மக மாகச் சலிக்கின்றது. |
| | | | இப்படி அலைகின்ற, | இந்தப் பிரகாரம் சலித்துக்கொண்டிருக்கின்ற, |
| 220 | | | விருத்திக்கு, | அந்தக் கரண பரிணும மாகிய விருத்திக்கு, |
| | | | மனம் என்று பெயர். | மனம்என்று நாமமாம். |
| | | | அக்கினியின் அம்சம், | அக்கினி பூதத்தின் சத்துவ அம்சம், |
| | | | கூடியதற்கு அடையாளம், | சேர்ந்திருப்பதற்கு அறிகுறியாவது, |
| | | | அந்தக்கரணமும், | சத்துவாம்ச சமட்டியாகிய அகக்கரணமும், |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 220 | 2 அத்தியா ரோப | 12 | அக்கினியைப் போல, | அக்கினிவிஷயங்களைப் பிரகாசிப்பது போல, |
| 221 | நிருபகம் | | ஈது இன்னது என்று, | இது இன்னது என்ப தாக விஷயங்களை, |
| | | | விளக்கு விக்கின்றது. | பிரகாசிப்பிக்கின்றது. |
| | | | இப்படி விளக்கு விக்கின்ற விருத் திக்கு, | இப்படிப் பிரகாசிக் கின்ற அந்தக் கரண பரிணமமாகிய விருத் திக்கு, |
| | | | புத்தி என்று பெயர். | புத்தி என்று நாமமாம். |
| | | | அப்புவின்அம்சம், | அப்பு பூதத்தின் சத்துவ அம்சம், |
| 222 | | | கூடியதற்கு அடையாளம், | சேர்ந்திருப்பதற்கு அறி குறியாவது, |
| | | | அந்தக்கரணமும், | சத்துவாம்ச சமட்டி யாகிய அகக்கரண மும், |
| | | | அப்புவைப்போல, | அப்பு சார்ந்த பதார்த் தங்களை இழுப்பது போல, |
| | | | விடயங்களைப் பற்றி, | முன்னிட்ட விஷயங் களைப் பொருந்தி, |
| | | | இழுக்கின்றது. | அவதானம் (கிரகித் தல்) செய்கின்றது. |
| | | | இப்படி இழுக் கின்ற, | இங்ஙனம் அவதானிக் கின்ற (கிரகிக்கின்ற), |
| | | | விருத்திக்கு, | அந்தக்கரண பரிணம மாகிய விருத்திக்கு, |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 222 | 2 அத்தியா ரோப நிருபகம் | 12 | சித்தம் என்று பெயர். | சித்தம் என்று நாம மாம். |
| 223 | | | பிருதிவியின் அம்சம், | பிருதிவி பூதத்தின் சத்துவ அம்சம், |
| | | | கூடியதற்கு அடையாளம், | சேர்ந்திருப்பதற்கு அறிகுறியாவது, |
| 224 | | | அந்தக் கரணமும், | சத்துவாம்ச சமட்டியா கிய அகக்கரணமும், |
| | | | பிருதிவியைப் போல, | பிருதிவிபூதம் கடின மாக இருப்பதுபோல, |
| | | | கடினமாகநின்று, | உரப்பாக இருந்து கொண்டு, |
| | | | நான் என்று அபி மானிக்கின்றது. | தேகாதிகளை அகம் என்று அபிமானிக் கின்றது. |
| | | | இப்படி அபிமா னிக்கின்ற, | இங்ஙனம் (அகம் என்று) அபிமானத் தைச் செய்கின்ற, |
| | | | விருத்திக்கு. | அந்தக்கரண பரிணாம மாகிய விருத்திக்கு, |
| | | | அகங்காரம்என்று பெயர். | அகங்காரம் என்று நாம மாம். |
| 227 228 | | 13 | பின்னும் ஆகாய மாதிய பஞ்ச பூதங்களின், | பின்பும் ஆகாயம் முத லிய ஐந்துபூதங்களின், |
| | | | சாத்விக அம்சத் தில், | சத்துவகுண அம்சத் தில், |
| | | | பூதத்துக்கு ஒவ் வொரு மாத்திரை எடுத்து, | ஒவ்வொரு பூதத்திற்கு ஒவ்வொரு அம்சம் எடுத்து, |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 228 | 2 அத்தியா ரோப நிருபகம் | 13 | தனித் தனியே வைக்கப்பட்டது, | தனிமைத்தனிமையாக வைக்கப்பட்டது, |
| | | | சுரோத்திராதி ஞானேந்திரியங் கள் என்று சொல் லப்படும். | சுரோத்திரம் முதலிய ஞான இந்திரியங்கள் என்று கூறப்படும். |
| | | | இவைகளில் சுரோத்திரம், | இவ்விந்திரியங்களில் சுரோத்திர இந்திரிய மானது, |
| | | | ஆகாயத்தின் அம்சமானபடி யால், | ஆகாயபூத சத்துவ அம்சம் ஆனமையால், |
| | | | ஆகாயத்தின் குணமான, | ஆகாய பூதத்தின் சுபாவ குணமாகிய, |
| | | | சத்தத்தை மாத் திரம் அறியும். | ஒலியை மாத்திரம் அறியும். |
| 230 | | | துவக்கு, | துவக்கு இந்திரிய மானது, |
| 231 | | | வாயுவின் அம்ச மானபடியால், | வாயுபூத சத்துவாம்சம் ஆனமையால், |
| | | | வாயுவின் குண மான, | வாயு பூதத்தின் சுபாவ குணமாகிய, |
| | | | பரிசத்தை மாத் திரம் அறியும். | ஊறை (ஊறு என்னும் பரிசத்தை) மாத்திரம் அறியும். |
| | | | சட்சு, | சட்சு இந்திரியமானது, |
| | | | அக்கினியின் அம்சம் ஆனபடி யால், | அக்கினி பூத சத்துவ அம்சம் ஆனமையால், |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள். |
|---|---|---|---|---|
| 232 | 2 அத்தியாரோப நிருபகம். | 13 | அக்கினியின் குணமான, | அக்கினி பூதத்தின் சுபாவ குணமாகிய, |
| | | | ரூபத்தை மாத்திரம் அறியும். | உருவத்தை மாத்திரம் அறியும். |
| 233 | | | சிங்ஙுவை, | சிங்ஙுவை இந்திரிய மானது, |
| 234 | | | அப்புவின் அம்சம் ஆனபடியால், | அப்புப்பூத சத்துவ அம்சம் ஆனமையால், |
| | | | அப்புவின் குணமான, | அப்புப் பூதத்தின் சுபாவ குணமாகிய; |
| | | | இரசத்தை மாத்திரம் அறியும். | சுவையை மாத்திரம் அறியும். |
| 235 | | | ஆக்கிராணம், | ஆக்கிராண இந்திரிய மானது, |
| | | | பிருதிவியின் அம்சம் ஆனபடியால், | பிருதிவிபூத சத்துவ அம்சம் ஆனமையால், |
| | | | பிருதிவியின் குணமான, | பிருதிவி பூதத்தின் சுபாவ குணமாகிய, |
| | | | கந்தத்தை மாத்திரம் அறியும். | வாசனையை மாத்திரம் அறியும். |
| 241 | | | இப்படி ஐந்தும் ஒன்றோடு ஒன்று கூடாதபடியால், | இவ்வாறு ஐந்து இந்திரியங்களும் ஒன்றுடன் ஒன்று சேராதபடியால், |
| | | | ஒன்று மற்றொன்றின் குணத்தைக் கிரகிக்க அறியாது. | ஒரு இந்திரியம் மற்றொரு இந்திரியத்தின் குணத்தைக் கிரகிக்க அறியாது. |
| | | | அந்தக்கரணம் ஐந்தும் ஒன்றாகக் | உள்ளம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம், |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 241 | 2 அத்தியாரோப நிருபகம் | 13 | கூடியதானமையால், | என்னும், அந்தக் கரணம் ஐந்தும் ஒருமையாகச்சேர்ந்ததானமையால், |
| | | | ஐந்து இந்திரியங்களினாலும், | சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்நுவை, ஆக்கிராணம், என்னும் ஐந்து இந்திரியங்களினாலும், |
| | | | ஐந்து விடயங்களையும் அறியும். | சத்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம், என்னும் ஐந்து விடயங்களையும் அறியும். |
| | | | அந்தக்கரணம் (5) ஞானேந்திரியம் (5) ஆகிய பத்தும் சத்துவ அம்சம் ஆனபடியால், | அகக்கரணம் ஐந்தும், அறிகருவி ஐந்தும், ஆகிய பத்தும் சத்துவ குண அம்சம் ஆனமையால், |
| | | | ஞானசாதனம் ஆயின. | ஞானத்திற்குச் சாதனம் ஆயின. |
| 241 242 | | 14 | பின்னும் ஆகாயமாதிய ஐந்து பூதங்களின் இராஜதாம்சங்களில், | பின்பும், ஆகாயம் முதலிய ஐந்து பூதங்களின் இரஜோகுண அம்சங்களில், |
| | | | பூதத்துக்கு ஓர் ஒரு மாத்திரை எடுத்து, | ஒரு ஒரு பூதத்துக்கு ஒரு ஒரு அம்சம் எடுத்து, |
| | | | ஒன்றுகக் கூட்டி வைக்கப்பட்டவை, | ஒருமையாகச் சேர்த்து வைக்கப்பட்டவை, |

(பக்க எண் 3ஆம் பதிப்பு வியாக்கியான நூல்படி)

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 242 | 2 அத்தியா ரோப நிருபகம் | 14 | வியாணுதி பஞ்ச வாயுக்கள் ஆம். இவைகளில் வியான வாயு, | வியானன் முதலிய ஐந்து வாயுக்கள் ஆம். இப்பஞ்ச வாயுக்களில் வியானவாயுவானது, |
| | | | ஆகாயத்தின் அம்சம் ஆனபடி யால், | ஆகாய பூத இராஜ தாம்சம் ஆனமையால், |
| 243 | | | ஆகாயத்தைப் போல, | ஆகாயபூதம் சகல பூதங்களிலும் வியா பித்துஇருப்பதுபோல, |
| | | | சர்வாங்கமும், | சிரசரணுதிய சகல அங்கங்களிலும், |
| | | | வியாபித்து இருக் கும். | வியாபித்துத் தாங்கிக் கொண்டிருக்கும். |
| 244 | | | பிராணவாயு, | பிராணவாயுவானது, |
| | | | வாயுவின் அம்சம் ஆனபடியால், | வாயுபூத இராஜதாம் சம் ஆனமையால், |
| | | | வாயுவைப்போல, | வாயு சதாசலித்துக் கொண்டிருப்பதுபோல, |
| | | | இருதயத்தில் இருந்து, | இருதய ஸ்தானத்தில் இருந்து, |
| | | | நாசிக ஆதி பரி யந்தம், | மூக்கின் அடிவரையில், |
| | | | அலையும். | சலித்துக்கொண்டிருக் கும், |
| 245 | | | அபானவாயு, | அபான வாயுவானது, |
| | | | அக்கினியின் அம்சம் ஆனபடி யால், | அக்கினிபூத இராஜ தாம்சம் ஆனமை யால், |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும், பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 245 | 2 அத்தியா ரோப நிருபகம் | 14 | அக்கினியைப் போல, | அக்கினி கிட்டியவை களைத் தகிப்பதுபோல, |
| | | | சாடர அக்கினி யாக, | உதர அக்கினி (மூல அக்கினி)யாக, |
| | | | உஷ்ணித்துக் கொண்டு, | உஷ்ணகாரம் ஆகி, |
| | | | குதத்தைப் பற்றி நின்று, | மலவாயிலைப் பொருந்தி நின்று, |
| | | | உண்ட அந்நபாந ஆதிகளை, | புசித்த அந்நம், பாநம். முதலியவற்றை, |
| 246 | | | சீரணிப்பிக்கும். | சமிப்பிக்கும். |
| | | | சமானவாயு, | சமான வாயுவானது, |
| | | | அம்புவின் அம்சம் ஆனபடியால், | அப்பு பூத இராஜதாம் சம் ஆனமையால், |
| | | | சரீர நடுவான, | சரீர மத்தியாகிய, |
| | | | நாபிஸ்தானத்தில் நின்று, | உந்தி ஆகிய இடத்தில் இருந்து, |
| | | | உண்ட அந்ந ரசங்களை, | புசிக்கப்பட்ட அந்ந சாரங்களை, |
| 247 | | | அப்புவைப்போல, | அப்பு, பதார்த்தங்களை இழுப்பது போல, |
| | | | இழுக்கும். | சகல நாடிகளிலும் இழுத்துச் சமப்படுத் தும். |
| 248 | | | உதானவாயு, | உதான வாயுவானது, |
| | | | பிருதிவியின் அம் சம் ஆனபடியால், | பிருதிவிபூத இராஜத அம்சம் ஆனமையால், |

(பக்க எண் 3 ஆம் பதிப்பு வியாக்கியான நூல்படி)

| நூல் புக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 248 | 2 அத்தியா ரோப நிருபகம். | 14 | கண்டத்தைப் பற்றி, | கண்டஸ்தானத்தைப் பொருந்தி, |
| | | | பிருதிவியைப் போல, | பிருதிவி கடினமாய் இருப்பது போல, |
| | | | கடினமாக நின்று, | கடுமையாக இருந்து, |
| | | | உண்ட அந்நபாந ஆதிகளை, | புசிக்கப்பட்ட அந்நம் பாநம்முதலியவைகளை, |
| | | | கடையும். | கடைந்து தள்ளும். |
| 250 | | | இந்த ஐந்து வாயுக்களையும் அல்லாமல், | இந்தப் பஞ்ச வாயுக் களையும் அன்றி, |
| | | | வாந்தி பண்ணு விக்கின்றது நாகன் என்றும், | வாந்தி செய்விக் கின்றது நாகன் என வும், |
| | | | இமைத்து விழிப் பிக்கின்றது கூர் மன் என்றும், | இமைத்து விழிப்பிக்கச் செய்வது கூர்மன் எனவும், |
| 250 | | 14 | குறுகுறுத்துத் தும் முவிக்கின்றது கிரி கரன் என்றும், | குறுகுறுத்துத் தும்மு விக்கச் செய்வது கிரி கரன் எனவும், |
| | | | கொட்டாவி கொள்ளுவிக் கின் றது தேவதத்தன் என்றும், | கொட்டாவி கொள்ளு விக்கச் செய்வது தேவ தத்தன் எனவும், |
| | | | வீங்கு விக்கின்றது தனஞ்சயன் என்றும், | வீங்குவிக்கச் செய்வது தனஞ்சயன் எனவும், |
| | | | வேறே ஐந்து வாயுக்கள் உண்டு என்று சிலர் சொல்லுவர்; | வேறாகப் பஞ்ச வாயுக் கள் உண்டு என்று சில பேர்கள் சொல்லுவார் கள்; |

(பக்க எண் 3ஆம் பதிப்பு வியாக்கியான நூல்படி)

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 250 | 2 அத்தியா ரோப நிருபகம் | 14 | இவ்வைந்தும் பிராணனுடைய தொழில் ஆனபடியால், வேறு அல்ல. | இந்த ஐந்தும் பிராண வாயுவினுடைய காரியம் ஆனமையால் வேறு அல்ல. |
| 251 | | 15 | பின்னும், ஆகாயம் ஆதிய ஐந்து பூதங்களின் இராஜத அம்சத்தில், | பின்பும் ஆகாயம் முதலிய பஞ்ச பூதங்களின் இரஜோகுண அம்சத்தில், |
| | | | பூதத்துக்கு ஓர் ஒரு மாத்திரை எடுத்துத் தனித் தனியே வைக்கப் பட்டவை, | ஒவ்வொரு பூதத்திற்கு ஒரு ஒரு அம்சம் எடுத்து தனிமைத் தனிமையாக வைக்கப்பட்டவை, |
| | | | வாக்காதி கன்மேந்திரியங்கள் என்று சொல்லப் படும். | வாக்கு முதலிய கர்ம இந்திரியங்கள் என்று கூறப்படும். |
| | | | இவைகளில், | இவ்வைந்து இந்திரியங்களில், |
| | | | ஆகாயத்தின் இடமாக, | ஆகாயத்தைப் பற்றிக் கொண்டு, |
| | | | வாக்கு, | ([1] நாக்கு நுனி, [2]தாலு மூலம் அதாவது மேல் வாயாகிய அண்ணம், [3]மேலுதடு, [4]கீழுதடு [5] இருதயம், [6]கண்டம், [7]தந்தம் அதாவது பல், [8]பிரமரந்திரமாகிய உச்சித்துவாரம், ஆகிய அட்டதானங்களைப் பொருந்தி) வாக்கு இந்திரிய மானது, |

(பக்க எண் 3ஆம் பதிப்பு வியாக்கியான நூல்படி)

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 252 | 2 அத்தியாரோப நிருபகம் | 15 | வசனிக்கும். | அக்ஷராதி பதசமூக வாக்கிய உச்சாரணக் கிரியைகளை செய்யும். |
| | | | வாயுவின் இடமாக, | வாயுவைப் பற்றிக் கொண்டு, |
| | | | பாணி, | பாணி இந்திரியம் கைகளில் இருந்து, |
| | | | இடுதல் ஏற்றல் செய்யும். | தான (கொடுத்தல்) ஆதானக் (வாங்குதல்) கிரியைகளைச் செய்யும். |
| 253 | | | அக்கினியின் இடமாக, | அக்கினியைப் பற்றிக் கொண்டு, |
| | | | பாதம், | பாத இந்திரியம் கால்களில் இருந்து, |
| | | | நடக்கும். | கமந (போதல்) ஆகமநக் (வருதல்) கிரியைகளைச் செய்யும். |
| | | | அப்புவின் இடமாக, | அப்புவைப் பற்றிக் கொண்டு, |
| | | | பாயுரு, | பாயுரு இந்திரியம் குதத்தில் இருந்து, |
| | | | மல சலங்களை, | மல மூத்திரங்களை, |
| | | | வெளியில் தள்ளும். | வெளியில் விசர்ச்சனம் செய்யும். |
| 254 | | 15 | பிருதிவியின் இடமாக, | பிருதிவியைப் பற்றிக் கொண்டு, |
| | | | உபத்தம், | உபத்த இந்திரியம் குய்யத்தில் இருந்து, |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 254 | 2 அத்தியா ரோப நிருபகம். | 15 | சுகத்தைப் பண்ணும். | (இந்திரிய விசர்ச்சனத்தால்) இன்பத்தைச் செய்யும். |
| 255 | | | இவ்வைந்து இந்திரியங்களும், | இந்த ஐந்து இந்திரியங்களும், |
| | | | தனித்தனியே இருக்கின்றமையால், | தனிமைத் தனிமையாக இருக்கின்றபடியால், |
| | | | ஒன்று மற்றொன்றின் தொழிலைச் செய்யமாட்டாது. | ஓர் இந்திரியம், மற்றோர் இந்திரியத்தின் தொழிலைச் செய்யாது. |
| | | | வியானாதி வாயுக்கள் ஐந்து மாத்திரையும் ஒன்றாகக் கூடியதானமையால், | வியானன் முதலிய வாயுக்கள் ஐந்து அம்சமும் ஒருமையாகச் சேர்ந்ததானபடியால், |
| | | | கன்மேந்திரியம் ஐந்தின் வழியினாலும், | கன்மேந்திரியம் ஐந்தின் மார்க்கத்தினாலும், |
| | | | ஐந்து தொழிலையும் செய்து முடிக்கும். | பஞ்சக்கிரியைகளையும் செய்து முடிக்கும். |
| | | | இவ்வாயுக்கள் (5) கன்மேந்திரியங்கள் (5) ஆகிய பத்தும், | இந்த வியானாதி வாயுக்கள் ஐந்தும், வாக்காதிகன்மேந்திரியங்கள் ஐந்தும், ஆகிய பத்தும், |
| | | | இராஜத அம்சம் ஆனமையால், | இராஜதகுண அம்சம் ஆனபடியால், |
| | | | கிரியா சாதனம் ஆயின. | தொழிற் சாதனம் ஆயின. |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 257 | 2 அத்தியா ரோப நிருபகம் | 16 | அந்தக்கரணம் (5), ஞானேந்திரியம் (5), வாயுக்கள் (5), கன்மேந்திரியம் (5) ஆகிய (20) தத்துவங்களும் சூட்சும சரீரம் என்று சொல்படும். | அகக்கரணம் (5), அறிகருவி (5), வாயுக்கள் (5), தொழிற்கருவி (5) ஆகிய (20 தத்துவங்களும், நுண்ணிய சரீரம் என்று கூறப்படும். |
| | | | இச் சூட்சும சரீரத்தை, | இந்த நுண்ணிய சரீரத்தை, |
| | | | மாயாப் பிரதிவிம்பராகிய ஈசுவரன், | மாயையில் பிரதிவிம்பர் ஆகிய ஈசுவரன், |
| | | | அவித்தியாப் பிரதிவிம்பர் ஆகிய ஜீவர்கள், | அவித்தைகளில் பிரதிவிம்பித்தவர்கள் ஆகிய ஜீவர்கள், |
| | | | அநேகர் ஆனமையால், | பலர் ஆனபடியினால், |
| | | | ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு சரீரமாகச் சிருஷ்டித்து அளித்தான். | ஓர் ஒருவருக்கும். ஓர் ஒரு சரீரமாகச் சிருஷ்டித்துக் கொடுத்தான். |
| | | | இப்படிச் சூட்சும சரீர கற்பனை சொல்லப்பட்டது. | இவ்வாறு சூட்சும சரீர உற்பத்திக் கற்பனை கூறப்பட்டது. |
| 263 | | 17 | இனித் தூலபூத உற்பத்தி, | இனிமேல் தூலபூதங்களின் உற்பத்தி, |
| | | | சொல்லப்படுகிறது. | கூறப்படுகிறது. |
| | | | மிஞ்சிய, | சத்துவ, இராஜத, அம்சங்கள் நீங்கி மீதமாகிய, |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 263 | 2 அத்தியா ரோப நிருபகம் | 17 | தாமத அம்சமாக இருக்கின்ற, | தமோ அம்சமாய் இருக்கின்ற; |
| 264 | | | ஐந்து பூதங்களை யும், | பஞ்ச பூதங்களையும், |
| | | | ஒவ்வொன்றை, | ஒவ்வொரு பூதத்தை யும், |
| | | | இரண்டிரண்டா கப் பகுத்து, | இரண்டு இரண்டு பூத மாகப் பாகித்து, |
| | | | முதல் பாதி ஐந் தையும், | முதல் பாதியாகிய ஐந்து பூதத்தையும், |
| | | | ஒவ்வொன்றை, | ஒவ்வொரு பூதத்தை, |
| | | | நான்கு நான்கா கப் பகுத்து, | நான்கு நான்கு பாக மாகப் பாகித்து, |
| | | | இரண்டாம் பாதி ஐந்தில், | பிற்பாதி ஆகிய ஐந்து பூதங்களில், |
| | | | தன் அம்சத்துடன் கூட்டாமல், | தன்தன் அம்சத்துடன் சேர்க்காமல், |
| | | | மற்றைய நான்கு பூதங்களுடனும், | ஏனைய நான்கு பூதங் களோடு, |
| | | | பூதத்துக்கு அரைக் கால் அரைக்கால் மாத்திரையாக, | ஒவ்வொரு பூதத்துக்கு அரைக்கால் அரைக் கால் பங்கு மாத்திரை யாக, |
| | | | சேர்க்கின்றது, | ஒன்றுபடுத்துகிறது, |
| 265 | | | பஞ்சீகரணம் என்று சொல்லப் படும். | கலத்தல் என்று கூறப் படும். |
| 266 | | 18 | இங்ஙனம் பஞ்சீ கரிக்கப்பட்டதூல பூதங்களில், | இவ்வாறு கலத்தல் செய்யப்பட்ட தூல பஞ்ச பூதங்களில், |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 266 | 2 அத்தியா ரோப நிருபகம் | 18 | ஆகாயத்தில், | ஆகாய பூதத்தில், |
| | | | பரிச, ரூப, ரச, கந்தம் ஆகிய நான்கு குணங் களும், | ஊறு, உருவம், சுவை, வாசனை, ஆகிய நான்கு விதமான குணங்களும், |
| | | | வியாப்பியம் ஆன மையால், | அடங்கியிருக்கின்ற மையால், |
| | | | அதிரிசியம் ஆம். | (இந்திரியங்கட்கு) அறியப்படாதன ஆம். |
| | | | நிசகுண்மாகிய சப்தம், | யதார்த்த (அதற் குள்ள) குணமாகிய ஒலி, |
| | | | திரிசியம் ஆம். | (இந்திரியங்கட்கு) அறியப்படுவன ஆம். |
| | | | வாயுவில், | வாயு பூதத்தில், |
| | | | ரூப, ரச, கந்தம் ஆகிய மூன்று குணங்களும், | உருவம், சுவை, வாசனை ஆகிய மூன்று குணங்களும், |
| | | | வியாப்பியம் ஆன மையால், | அடங்கியிருக்கின்ற மையால், |
| | | | அதிரிசியம் ஆம். | (இந்திரியங்கட்கு) அறியப்படாதன ஆம். |
| | | | காரணகுண மாகிய சப்தமும், | மூலகுணமாகிய ஒலி யும், |
| | | | நிசகுணமாகிய பரிசமும், | யதார்த்த (அதற் குள்ள குணமாகிய ஊறும், |
| | | | திரிசியம் ஆம். | (இந்திரியங்கட்கு) அறியப்படுவன ஆம். |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 266 | 2 அத்தியா ரோப திருபகம். | 18 | அக்கினியில், | அக்கினி பூதத்தில், |
| | | | ரச, கந்தம் ஆகிய இரண்டு குணங் களும், | சுவை, வாசனை ஆகிய இரண்டு குணங்களும், |
| | | | வியாப்பியம் ஆன மையால், | அடங்கியிருக்கின்ற மையால், |
| | | | அதிரிசியம் ஆம். | (இந்திரியங்கட்கு) அறியப்படாதன ஆம். |
| | | | காரண குணங் களாகிய சப்த பரிசமும், | மூல குணங்களாகிய, ஒலி, ஊறும், |
| | | | நிச குணமாகிய ரூபமும், | யதார்த்த (அதற் குள்ள) குணமாகிய உருவமும், |
| | | | திரிசியம் ஆம். | (இந்திரியங்கட்கு) அறியப்படுவன ஆம். |
| | | | அப்புவில், | அப்புப் பூதத்தில், |
| | | | கந்தகுணம், | வாசனையாகிய குணம், |
| | | | வியாப்பியம் ஆன மையால், | அடங்கியிருக்கின்ற மையால், |
| | | | அதிரிசியம் ஆம். | (இந்திரியங்கட்கு) அறியப்படாதது ஆம். |
| | | | காரண குணங்க ளாகிய சப்த, பரிச, ரூபமும், | மூலகுணங்களாகிய ஒலி, ஊறு, உருவமும், |
| | | | நிசகுணமாகிய ரசமும், | யதார்த்த (அதற் குள்ள) குணமாகிய சுவையும், |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 266 | 2 அத்தியாரோப நிருபகம் | 18 | திரிசியம் ஆம். | (இந்திரியங்கட்கு) அறியப்படுவன ஆம். |
| | | | பிருதிவியில், | பிருதிவி பூதத்தில், |
| | | | காரண குணங்களாகிய சப்த, பரிச, ரூப, ரசமும், | மூலகுணங்களாகிய ஒலி, ஊறு, உருவம், சுவையும், |
| | | | நிச குணமாகிய கந்தமும், | யதார்த்த (அதற்குள்ள) குணமாகிய வாசனையும், |
| | | | திரிசியம் ஆம். | (இந்திரியங்கட்கு) அறியப்படுவன ஆம். |
| 269 270 | | 19 | சூட்சும பூதங்களில் நின்றும், சூட்சும சரீரங்கள் தோன்றினாற் போல, | நுண்ணிய பூதங்களில் இருந்தும் நுண்ணிய சரீரங்கள் உண்டானாற் போல, |
| | | | பஞ்சீகரிக்கப் பட்ட தூலபூதங்களில் நின்றும், | கலத்தல் செய்யப் பட்ட பருமைப் பூதங்களில் இருந்தும், |
| | | | ஆறு தத்துவமாய், நரல்வகைப் பிறப்பாய், மூவகைச் சாதியாய், இருக்கின்ற தூல சரீரங்கள் தோன்றின. | ஆறுவித தத்துவமாய், நான்கு வகையான பிறப்பாய், மூன்று வகையான சாதியாய், இருக்கின்ற பருமைச் சரீரங்கள் உண்டாயின. |
| | | | இவற்றுள், | ஆறுதத்துவம், நால்வகைப் பிறப்பு, மூவகைச் சாதிகளாகிய இவைகளினுள், |
| | | | ஆறு தத்துவங்கள் ஆவன, | ஆறு தத்துவம் என்று சொல்லப்பட்டவைகள், |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 270 | 2. அத்தியாரோப நிருபகம் | 19 | சருமம், உதிரம், மாம்சம், சநாயு, அஸ்தி, மச்சை, ஆகிய இவைகள் ஆம். | தோல், இரத்தம், மேதசு (சதை), நரம்பு, எலும்பு, மூளை, ஆகிய இத்தத்துவங்கள் ஆம். |
| | | | நால்வகைப் பிறப்புக்கள் ஆவன, | நான்கு வித ஜனனம் என்று சொல்லப்பட்டவைகள், |
| 271 | | | சராயுஜம் ; | கருப்பையுள் கட்டுப்பட்டிருந்து தோன்றுவன ; |
| | | | அண்டஜம் ; | முட்டையில் இருந்து தோன்றுவன ; |
| | | | சுவேதஜம் ; | வேர்வையில் நின்றும் தோன்றுவன; |
| | | | உத்பிஜ்ஜம் ; | (உத் = மேல், பித் = பிளந்து, ஜம்=தோன்றுவன).(வித்து, வேர், கிழங்காதிகளில் நின்றும்) மேல் பிளந்து தோன்றுவன ; |
| | | | ஆகிய இவைகளாம். | ஆகிய இச் சனனங்களாம். |
| 274 | | | மூவகைச் சாதிகள் ஆவன, | மூன்றுவித சாதிகள் எவை எனின், |
| | | | இகலோக புத்தி, | இகலோக போக விருப்பப் புத்தியையும், |
| | | | பரலோக புத்தியை, | பரலோக போக விருப்பப் புத்தியையும், |
| | | | தருகின்ற மாநுட சரீரங்கள், | கொடுக்கின்ற மாநுட சரீரங்கள், |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 274 | 2 அத்தியாரோப நிருபகம் | 19 | உத்தம சாதியாம். | முதன்மைச் சாதியாகும். |
| 275 | | | பரலோக புத்தியை மறைத்து, | பரலோகபோக விருப்பப்புத்தியை மறைத்து, |
| | | | இகலோக புத்தியை மாத்திரம் தருகின்ற, | இகலோகபோக விருப்பப் புத்தியை மாத்திரம் கொடுக்கின்ற, |
| | | | பசு, பக்ஷியாதிய சரீரங்கள் மத்திம சாதியாம். | பசு, பக்ஷி முதலிய சரீரங்கள் நடுத்தரமான சாதியாம். |
| | | | இருவகைப் புத்தியையும் மறைத்திருக்கின்ற, | இகலோக புத்தி, பரலோக புத்தி ஆகிய இருவகைப் புத்தியையும் மறைத்திருக்கின்ற, |
| | | | மரம், கொடி, செடியாதிகள், அதம சாதியாம். | மரம், கொடி, செடி முதலியவைகளின் சரீரங்கள் கடைத்தரமான சாதியாம். |
| 276 | | 20 | இப்படிப் பிருதிவி தத்துவமாய்இருக்கின்ற பூலோகத்தில் தோற்றுகின்றது போல, | இவ்வாறுபிருதிவிதத்துவமாய் உள்ள பூவுலகில் காணப்படுவது போல, |
| | | | அப்பு, அக்கினி, வாயு, ஆகாயம் என்னப்பட்ட தத்துவங்களாய், | நீர், நெருப்பு, காற்று, வெளி என்று கூறப்பட்ட தத்துவங்களாய், |
| | | | நிரல் நிரையே இருக்கின்ற, | வரிசை வரிசையாக இருக்கின்ற, |
| | | | பிதிர்லோக,தேவலோக, யக்ஷ, | பிதிர்க்கள் உலகம், தேவர்கள் உலகம், |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 276 | 2 அத்தியா ரோப நிருபகம். | 20 | கந்தர்வலோக, சித்தர் லோகங் களினும், | யக்ஷ கந்தர்வர்கள் உலகம், சித்தர்கள் உலகங்களிலும், |
| | | | சந்திரன், நட்சத் திரமாகத் தோற் றுகின்ற பிதிர்க் கள், | சந்திரனுகவும், நட்சத் திரங்களாகவும்காணப் படுகின்ற பிதிர்க்கள், |
| | | | சூரியன் முதலான தேவதைகள், | ஆதித்தன் முதலான தேவர்கள், |
| | | | யக்ஷ, கந்தர்வர் கள், | யக்ஷர்கள், கந்தர்வர் கள், |
| | | | சித்தர்கள், சரீ ரங்கள், | சித்திகளுடைய சித்தர் கள் ஆகியவர்களின் தேகங்கள், |
| | | | உத்தமசாதியாம். | முதன்மைத் தரம் ஆன சாதியாகும். |
| | | | காமதேனு, ஐரா வதம், அந்நம், கருடன் ஆதிய சரீரங்கள், | காமதேனுப்பசு, ஐரா வதயானை, அந்நப் பக்ஷி, கருடப் பக்ஷி முதலியவை களின் தேகங்கள், |
| | | | மத்திய சாதியாம். | நடுத்தரம் ஆன சாதி யாகும். |
| | | | கற்பக விருக்ஷம், பாரிசாதம், ஆதிய சரீரங்கள், | கற்பகத்தரு, பாரிஜா தத்தரு, முதலியவை களின் தேகங்கள், |
| | | | அதம சாதியாம். | கடைத்தரம் ஆன சாதி யாகும். |
| | | | இப்படி, | இவ்வாறு, |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 276 | 2 அத்தியா ரோப் நிருபகம். | 20 | பிரகிருதி முதல் தூல சரீரம் ஈருய் உள்ள, | மூலப்பிரகிருதி முதலாக, தூலதேகம் முடிவாக உள்ள, |
| | | | தத்துவங்களின் தோற்றங்கள் சொல்லப்பட்டன. | பொருள்களின் கற்பனைத் தோற்றங்கள் கூறப்பட்டன. |
| 286 287 | 3 திதி நிருபகம். | 21 | தூல சரீரமே, | ஆறு தத்துவமாகிய தூல சரீரமே, |
| | | | அந்நமய கோசம். | அந்நமய மறைப்பாம். |
| 295 | | | சூட்சும சரீரம் மூன்று கோசங்களாய் இருக்கும். | நுண்ணிய தேகம் மூன்றுவித மறைப்புக்களாய் இருக்கும். |
| | | | எங்ஙனம் எனின் ? | எவ்வாறு என்ருல் ? |
| | | | பிராணவாயுவும், கன்மேந்திரியங்களும் கூடிப் பிராணமயகோசம். | பிராண வாயுவும், வாக்காதி கன்மேந்திரியங்களும் சேர்ந்து, பிராணமயமறைப்பாம். |
| 300 | | | மனதும், ஞானேந்திரியங்களும் கூடி மனோமயகோசம். | மனமும், சுரோத்திராதி ஞானேந்திரியங்களும் சேர்ந்து, மனோமய மறைப்பாம். |
| 305 | | | புத்தியும், ஞானேந்திரியங்களும் கூடி விஞ்ஞானமயகோசம். | புத்தியும், சுரோத்திராதி ஞானேந்திரியங்களும் சேர்ந்து, விஞ்ஞானமய மறைப்பாம். |
| 313 | | | காரண சரீரமே ஆனந்தமய கோசம். | மூல அஞ்ஞானமென்னும், அவித்தையாகிய காரணதேகமே ஆனந்தமய மறைப்பாம். |
| | | | இப்படிப் பஞ்ச கோசங்கள் சொல்லப்பட்டன. | இவ்வாறு, அந்நமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், |

| நூல் பக்க எண் | நிரூபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள். |
|---|---|---|---|---|
| | 3 திதி நிரூபகம் | | | ஆனந்தமயம் என்னும் ஐந்து மறைப்புக்கள் கூறப்பட்டன. |
| 324 | | 22 | ஆறு தத்துவங்களாய் உள்ள தூல சரீரத்தில், | ஆறுவித தத்துவங்களாய் உள்ள பருமைத் தேகத்தில், |
| | | | இருபது தத்துவங்களாய் உள்ளசூட்சும சரீரம் இருக்கின்றது. | இருபதுவித தத்துவங்களாய் உள்ள நுண்மைத் தேகம் இருக்கின்றது. |
| | | | அஃது எங்ஙன் எனின் ?. | அஃது எவ்விடத்து எனின் ? |
| | | | கன்மேந்திரியங்களுள் வாக்கும், ஞானேந்திரியங்களுள் சிங்ஙுவையும், வாயில் இருக்கும். | தொழில் இந்திரியங்களுள் வாக்கும் அறியும இந்திரியங்களுள் சிங்ஙுவையும், வாயின் இடத்தில் இருக்கும். |
| | | | உதான வாயுவும், மனதும் கண்டத்தில் இருக்கும். | உதானவளியும், மனமும், கழுத்தின் இடத்தில் இருக்கும். |
| | | | பிராண வாயுவும், புத்தியும்இருதயத்தில் இருக்கும். | பிராணவளியும், புத்தியும், இருதயத்தின் இடத்தில் இருக்கும். |
| | | | சமான வாயுவும், சித்தமும், நாபியில் இருக்கும். | சமானவளியும், சித்தமும், நாபியின் இடத்தில் இருக்கும். |
| | | | அபான வாயுவும், பாயுருவும், குதத்தில் இருக்கும். | அபானவளியும், பாயுருவும், குதத்தின் இடத்தில் இருக்கும். |
| | | | வியான வாயுவும், துவக்கு இந்திரிய | வியானவளியும், துவக்கு இந்திரியமும், |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 325 | 3 திதி நிருபகம் | 22 | மும், அகங்கார மும், சர்வாங்க மும் வியாபித்தி ருக்கும். | நான் என்னும் அகங் காரமும், சர்வ அங்க இடத்திலும் வியாபக மாகி இருக்கும். |
| | | | உச்சியிலே உள்ள மும், | உச்சியின் இடத்திலே உள்ளமும், |
| | | | கருவிழி நுனியிலே சட்சு இந்திரிய மும், | கருவிழி நுனியின் இடத் திலே சட்சு இந்திரிய மும், |
| | | | காதின் உள்ளே சுரோத்திர இந்தி ரியமும், | காதின் உள்ளிடத் திலே சுரோத்திர இந்திரியமும், |
| | | | மூக்கு நுனியிலே கிராண இந்திரிய மும், | மூக்கின் நுனியிடத் திலே கிராண இந்திரி யமும், |
| | | | கழுத்துக்கு மேல், தனித்தனியே இருக்கும். | கண்டத்திற்கு மேலி டத்தில், தனிமைத் தனிமையாகஇருக்கும். |
| | | | கழுத்திற்குக் கீழே கை, கால், குய்யங்களில், | கண்டத்திற்குக் கீழே, கையினிடத்திலும், காலினிடத்திலும், குய் யத்தினிடத்திலும், |
| | | | பாணி, பாதம், உபத்தம், மூன் றும் தனித்தனியே இருக்கும். | பாணி இந்திரியமும், பாத இந்திரியமும், உபஸ்த இந்திரியமும், ஆகிய மூன்றும் தனி மைத் தனிமையாக இருக்கும். |
| | | | இப்படித் தூல சரீர தத்துவங்கள் ஆறு, அதில் குடி புகுந்த சூட்சும சரீர தத்துவங்கள் | இவ்வாறு பருமைத் தேக தத்துவங்கள் ஆறு, அதில் குடிபுகுந்தநுண் மைத்தேக தத்துவங் |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள். |
|---|---|---|---|---|
| 325 | 3 திதி நிருபகம் | 22 | இருபது, ஆகத் தத்துவங்கள் இரு பத்தாறும், | கள் இருபது, ஆகத் தத்துவங்கள் இருபத் தாறும், |
| | | | பஞ்ச பூதங்களின் காரியங்கள் ஆன படியினாலே, | தூலம், சூட்சுமம், ஆகிய இருவித பஞ்ச பூதங்களின் சரீரியங் கள் ஆனபடியினாலே, |
| | | | ஒருமைப்பாடாகக் காரிய சரீரம் என்று சொல்லப் படும். | ஒருமைத் தன்மையா கக் காரிய சரீரம் என்று கூறப்படும். |
| | | 23 | அவித்தையில் பிரதிவிம்பனாய் உள்ள சிதா பாசன், | அஞ்ஞானத்தில் பிரதி விம்பனாக இருக்கின்ற சிதாபாசன் ஆனவன், |
| | | | சாக்கிரத்தில், | நனவு அவஸ்தையில், |
| | | | இந்த இருபத் தாறு தத்துவங் களுடன் கலந்து நிற்கும் போது, | இங்கு கூறிய இருபத் தாறு தத்துவங்களு டன் கலந்து இருக்குப் போது, |
| 326 | | | விசுவன் என்றும், வியாவகாரிக சீவன் என்றும் சொல்லப்படுவன். | விசுவன் எனவும், வியாவகாரிக சீவன் எனவும் கூறப்படுவன். |
| 327 | | | சொப்பனத்தில், | கனவு அவஸ்தையில், |
| | | | தூல சரீரத்தை விட்டு, | பருமைத் தேகத்தை விடுத்து, |
| | | | அந்தக்கரணத் துடன் கூடி நின்ற போது, | அகக் கரணத்துடன் பொருந்தி இருந்த போது, |
| | | | தைஜசன் என் றும், பிராதிபா சிக சீவன் என் | தைஜசன் எனவும், பிராதிபாசிக சீவன் எனவும், சொப்பன |

(பக்க எண் 3ஆம் பதிப்பு வியாக்கியான நூல்படி)

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 327 | 3. திதி நிருபகம் | 23 | றும், சொப்பன கற்பிதன் என்றும், சொல்லப் படுவன். | கற்பிதன் எனவும் கூறப்படுவன். |
| 328 | | | சுழுத்தியில், | சுழுத்தி (உறக்க) அவஸ்தையில், |
| | | | காரிய சரீர தத்துவங்கள் இருபத்தாறையும் விட்டு, | காரிய தேகத்தின்தத்துவங்கள் இருபத்தாறையும்விடுத்து, |
| | | | காரண சரீரத்தை மாத்திரம் பொருந்தி இருக்கும் போது, | காரண தேகத்தை மாத்திரம் கூடி இருக்கும் போது, |
| 333 | | | பிராஞ்ஞன் என்றும், பாரமார்த்திக சீவுன் என்றும் சொல்லப் படுவன். | பிராக்ஞன் எனவும். பாரமார்த்திக சீவன் எனவும், கூறப்படுவன். |
| | | | இப்படிச் சீவனுக்கு மூன்று சரீரங்களும், மூன்று அவத்தைகளும், சொல்லப்பட்டன. | இவ்வாறு சீவனுக்குத் தூலம், சூக்குமம், காரணம், என்னும் மூன்று தேகங்களும், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, என்னும் மூன்று அவஸ்தைகளும், கூறப்பட்டன. |
| 334 335 | | 24 | பிரஹ்ம சைதந்நியமும், | பிரம்ம சேதனமும், |
| | | | சாக்கிரத்துக்குச் சாட்சியாய் இருக்கும் போது, | நனவு அவஸ்தைக்கு (நனவுத் தொழில் நிகழ்ச்சி நிலைமைக்கு) -(வேறு பிரகாசங்களை அபேக்ஷியாமல், சுயம் பிரகாசமாய் இருந்து |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 335 | 3 திதி நிருபகம் | 24 | | அறியும் அறிவு வடிவமான) சாட்சியாய் இருக்கும் போது, |
| | | | சீவாத்மா எனவும், | சீவாத்மா என்றும், |
| | | | சொப்பனத்துக்குச் சாட்சியாய் இருக்கும் போது, | கனவு அவஸ்தைக்குச் சாட்சியாய் இருக்கும் போது, |
| | | | அந்தராத்மா எனவும், | அந்தர் ஆத்மா என்றும், |
| 336 | | | சுழுத்திக்குச் சாட்சியாய் இருக்கும் போது, | சுழுத்தி (உறக்க) அவஸ்தைக்குச் சாட்சியாய் இருக்கும் போது, |
| | | | பரமாத்மா எனவும், | பரமாத்மா என்றும், |
| 337 | | | அவத்தாத்திரய சாட்சியாய் இருக்கும் போது, | சாக்கிரம் (நனவு), சொப்பனம் (கனவு), சுழுத்தி (உறக்கம்), என்னும் அவஸ்தைகள் (தொழில் நிகழ்ச்சி நிலைமைகள்) மூன்றுக்கும் சாட்சியாய் இருக்கும் போது, |
| | | | ஞானாத்மா எனவும். கூடத்தர், எனவும் சொல்லப்படும். | ஞானாத்மா என்றும், கூடஸ்தர், என்றும் கூறப்படும். |
| 338 339 | | 25 | ஈசுவரனுக்கு மூன்றுசரீரங்களும் மூன்று அவத்தைகளும், சொல் லப்படுகின்றன, | இனி ஈசுவரனுக்கு மூன்று தேகங்களும் மூன்று அவஸ்தைகளும், கூறப்படுகின்றன, |

| நூல் பக்க எண் | நிருபகப் பிரிவு எண்ணும் பெயரும் | நூல் பிரிவு எண் | பதம் | பொருள் |
|---|---|---|---|---|
| 339 | 3. திதி நிருப்கம். | 25 | கற்பிதப் பரபஞ்ச வடிவமாகத் தோற்றுகின்ற, | கற்பிக்கப்பட்ட உலக வடிவமாகக் காணப் படுகின்ற, |
| | | | தூல பஞ்ச பூதங் களும், | தூலமான (பருமை யான) பஞ்ச பூதங் களும், |
| | | | அவற்றில் தோன்றிய, | அந்தப் பஞ்ச பூதங் களில் உண்டான, |
| | | | மூன்று சாதி களாய் இருக் கின்ற, | உத்தமம், மத்திமம், அதமம், ஆகிய மூன்று வித சாதிகளாய் இருக் கின்ற, |
| | | | தூல சரீர சமட்டி யுங் கூடி, | தூல தேகங்கள் சர்வ மும் சேர்ந்து, |
| | | | ஈசுர தூல சரீரம் என்றும், | ஈசுவரனுடைய தூல தேகம் எனவும், |
| | | | விராட்டு என்றும் சொல்லப்படும். | விராட்டு எனவும் கூறப்படும். |
| 340 | | | இதனுடனே கூடிச் சாக்கிர அவத்தையைப் பொருந்துகின்ற ஈசுவரன், | இந்த ஈசுவர தூல தேகமாகிய விராட்டு டனே சேர்ந்து, நனு அவஸ்தையைப் பொருந்துகின்ற ஈசு வரன், |
| | | | வைசுவானரன் என்றும், | வைசுவானரன் எனவும், |
| | | | இந்த இருவகைக் கும் அதிஷ்டான சைதந்நியம், | இந்த விராட்டு என் னும் தூல தேகம், நனு அவஸ்தை, ஆகிய இரண்டு வகைக்கும் அதிஷ்டானமான சேதனம், |

